என்பாலைப்பிறப்பறுத்திமையவர்க்குமறியவொண்ணாத்
தென்பாலைத்திருப்பெருந்துறையுறையுஞ்சிவபெருமா
னன்பாலீயக்கெனவேபுகுந்தருளியாட்கொண்ட
தென்பாலேநோக்கியவாறன்றேயெம்பெருமானே. (எ)

மூத்தானேமூவாதமுதலானேமுடிவில்லா
வோத்தானேபொருளானேயுண்மையுமாயின்மையுமாய்ப்
பூத்தானேபுகுந்திங்குப்புரளவேனைக்கருணையினாற்
பேர்த்தேநீயாண்டவாறன்றேயெம்பெருமானே. (அ)

மருவினியமலர்ப்பாதமனத்தில்வளர்ந்துள்ளுருகத்
தெருவுதொறுமிகவலறிச்சிவபெருமானென்றேத்திப்
பருகியநின்பரங்கருணைத்தடங்கடலிற்படிவாமா
றருளெனக்கிங்கிடைமருதேயிடங்கொண்டவம்மானே. (கூ)

நானேயோதவஞ்செய்தேன்சிவாயநமவெனப்பெற்றேன்
றேனாயின்னமுதமுமாய்த்தித்திக்குஞ்சிவபெருமான்
றானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தா
னூனாருமுயிர்வாழ்க்கையொறுத்தன்றேவெறுத்திடவே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# திருப்புலம்பல்.

சிவானந்தமுதிர்வு.

திருவாரூரிலருளிச்செய்யப்பட்டது.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூங்கமலத்தயனொடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறாவெண்ணீறாடீ
யோங்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே. (க

சடையானேதழலாடீதயங்குமூவிலைச்சூலப்
படையானேபரஞ்சோதீபசுபதீமழவெள்ளை
விடையானேவிரிபொழில்சூழ்பெருந்துறையாயடியேனா
னுடையானேயுனையல்லாதுறுதுணைமற்றறியேனே. (உ)

உற்றாரையான்வேண்டே னூர்வேண்டேன்பேர்வேண்டேன்
கற்றாரையான்வேண்டேன்கற்பனவுமினியமையுங
குற்றாலத்தமர்ந்துறையுங்கூத்தாவுன்குரைகழற்கே
கற்றாவின்மனம்போலக்கசிந்துருகவேண்டுவனே. (௩)

திருச்சிற்றம்பலம்.

# குலாப்பத்து.

அனுபவமிடையீடுபடாமை.
தில்லையிலருளிச்செயப்பட்டது.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

ஓடுங்கவந்தியுமேயுறவென்றிட் டுள்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னாடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (க)

துடியேரிடுகிடைத்தூயமொழியார்தோணசையாற்
செடியேறுதீமைகளெத்தனையுஞ்செய்திடினு
முடியேன்பிறவேனெனைத்தனதாண்முயங்குவித்த
வடியேன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (உ)

என்புள்ளுருக்கியிருவினையையீடழித்துத்
துன்பங்களைந்துதுவந்துவங்கடுய்மைசெய்து
முன்புள்ளவற்றைமுழுதழியவுள்புகுந்த
வன்பின்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௩)

குறியுநெறியுங்குணமுமிலார்குழாங்கடமைப்
பிறியுமனத்தார்பிறிவரியபெற்றியனைச்
செறியுங்கருத்திலுருத்தமுதாஞ்சிவபதத்தை
யறியுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௪)

பேருங்குணமும்பிணிப்புறுமிப்பிறவிதனைத்
தூரும்பரிசுதுரிசறுத்துத்தொண்டரொல்லாருஞ்
சேரும்வகையாற்சிவன்கருணைத்தேன்பருகி
யாருங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௫)

கொம்பிலரும்பாய்க்குவிமலராய்க்காயாகி
வம்புபழுத்துடலமாண்டிங்ஙன்போகாமே
நம்புமென்சிந்தைநணுகும்வண்ணநானணுகு
மம்பொன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௬)

மதிக்குந்திறலுடையவல்லரக்கன்றோணெரிய
மிதிக்குந்திருவடியென்றலைமேல்வீற்றிருப்பக்
கதிக்கும்பசுபாசமொன்றுமிலோமெனக்களித்திங்
கதிர்க்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௭)

இடக்குங்கருமுருட்டேனப்பின்கானகத்தே
நடக்குந்திருவடியென்றலைமேனட்டமையாற்
கடக்குந்திறலைவர்கண்டகர்தம்வல்லாட்டை
யடக்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௮)

பாழ்ச்செய்விளாவிப்பயனிலியாய்க்கிடப்பேற்குக்
கீழ்ச்செய்தவத்தாற்கிழியீடுநேர்பட்டுத்
தாட்செய்யதாமரைச்சைவனுக்கென்புன்றலையா
லாட்செய்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௯)

கொம்மைவரிமுலைக்கொம்பனையாள்கூறனுக்குச்
செம்மைமனத்தாற்றிருப்பணிகள்செய்வேனுக்
கிம்மைதரும்பயனித்தனையுமீங்கொழிக்கு
மம்மைகுலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# அற்புதப்பத்து.

---

அநுபவமாற்றாமை.
திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

---

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மையலாயிந்தமண்ணிடைவாழ்வெனு
  மாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்
  றலைதடுமாறாமே

பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்
பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோ
ரற்புதம்விளம்பேனே. (௧)

ஏய்ந்தமாமலரிட்டுமுட்டாததோ
ரியல்பொடும்வணங்காதே
சாந்தமார்முலைத்தையனல்லாரொடுந்
தலைதடுமாறாகிப்
போந்தியான்றுயர்புகாவணமருள்செய்து
பொற்கழலிணைகாட்டி
வேந்தனாய்வெளியேயென்முனின்றதோ
ரற்புதம்விளம்பேனே. (௨)

நடித்துமண்ணிடைப்பொய்யினைப்பலசெய்து
நானெனதெனுமாயக்
கடித்தவாயிலேநின்றுமுன்வினைமிகக்
கழறியேதிரிவேனைப்
பிடித்துமுன்னின்றப்பெருமறைதேடிய
வரும்பொருளடியேனை
யடித்தடித்துவக்காரமுன்றீற்றிய
வற்புதமறியேனே. (௩)

பொருந்துமிப்பிறப்பிறப்பிவைநினையாது
பொய்களேபுகன்றுபோய்க்
கருங்குழலினார்கண்களாலேறுண்டு
கலங்கியேகிடப்பேனைத்
திருந்துசேவடிச்சிலம்பவைசிலம்பிடத்
திருவொடுமகலாதே
யருந்துணைவனாயாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே. (௪)

மாடுஞ்சுற்றமுமற்றுளபோகமு
மங்கையாதம்மோடுங்
கூடியங்குளகுணங்களாலேறுண்டு
குலாவியேதிரிவேனை
வீடுதந்தென்றன்வெந்தொழில்வீட்டிட
மென்மலர்க்கழல்காட்டி

யாடுவித்தெனதகம்புகுந்தாண்டதோ
 ரற்புதமறியேனே. (௫)

வணங்குமிப்பிறப்பிறப்பிவைநினையாது
 மங்கையர்தமமோடும்
பிணைந்துவாயிதழ்ப்பெருவெள்ளத்தழுந்திநான்
 பித்தனாய்த்திரிவேனைக்
குணங்களுங்குறிகளுமிலாக்குணக்கடல்
 கோமளத்தொடுங்கூடி
யணைந்துவந்தெனையாண்டுகொண்டருளிய
 வற்புதமறியேனே. (௬)

இப்பிறப்பினி வினைமலர் கொய்துநா
 னியல்பொடஞ் செழுத்தோதித்
தப்பிலாதுபொற்கழல்களுக்கிடாதுநான்
 றடமுலையார் தங்கண்
மைப்புலாங்கண்ணாலேறுண்டுகிடப்பேனை
 மலரடியிணைகாட்டி
யப்பனென்னைவந்தாண்டுகொண்டருளிய
 வற்புதமறியேனே. (௭)

ஊசலாட்டுமிவ்வுடலுயிராயின
 விருவினையறுத்தென்னை
யோசையாலுணர்வார்க்குணர்வரியவ
 னுணர்வுதந்தொளியாக்கிப்
பாசமானவைபற்றறுத்துயர்ந்ததன்
 பரம்பெருங்கருணையா
லாசைதீர்த்தடியாரடிக்கூட்டிய
 வற்புதமறியேனே. (௮)

பொச்சையானவிப்பிறவியிற்கிடந்துநான்
 புழுத்தலைநாய்போல
விச்சையாயினவேழையர்க்கேசெய்தங்
 கிணங்கியேதிரிவேனை
யிச்சகத்தரியயனுமெட்டாததன்
 விரைமலர்க்கழல்காட்டி
யச்சனென்னையுமாண்டுகொண்டருளிய
 வற்புதமறியேனே. (௯)

செறியுமிப்பிறப்பிறப்பிவைநினையாது
செறிகுழலார்செய்யுங்
கிறியுங்கீழ்மையுங்கெண்டையங்கண்களு
முன்னியேகிடப்பேனை
யிறைவனெம்பிரானெல்லையில்லாததன்
னிணைமலர்க்கழல்காட்டி
யறிவுதநதெனையாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

# செ ன் னி ப் ப த் து.

---

சிவவிளைவு.

திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

---

ஆ சி ரி ய வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்.

தேவதேவன்மெய்ச்சேவகன்
றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுத
லாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றி
யறியொணாமலர்ச்சோதியான்
றூயமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிச்சுடருமே. (க)

அட்டமூர்த்தியழகனின்னமு
தாயவானந்தவெள்ளத்தான்
சிட்டன்மெய்ச்சிவலோகநாயகன்
றென்பெருந்துறைச்சேவகன்
மட்டுவார்குழன்மங்கையாளையோர்
பாகம்வைத்தவழகன்றன்
வட்டமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே. (உ

நங்கைமீரெனைநோக்குமின்னங்க
ணாதனம்பணிகொண்டவன்
றெங்குசோலைகள்சூழ்பெருந்துறை
மேயசேவகனாயகன்
மங்கைமார்கையில்வளையுங்கொண்டெம்
முயிருங்கொண்டெம்பணிகொள்வான்
பொங்குமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிப்பொலியுமே. (௫)

பத்தர்சூழப்பராபரன்
பாரில்வந்துபார்ப்பானெனச்
சித்தர்சூழச்சிவபிரான்
றில்லைமூதூர்நடஞ்செய்வா
னெத்தனாகிவந்தில்புகுந்தெமை
யாளுங்கொண்டெம்பணிகொள்வான்
வைத்தமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே. (௬)

மாயவாழ்க்கையைமெய்யென்றெண்ணி
மதித்திடாவகைநல்கினான்
வேயதோளுமைபங்கனெங்க
டிருப்பெருந்துறைமேவினான்
காயத்துள்ளமுதூறவூறநீ
கண்டுகொள்ளென்றுகாட்டிய
சேயமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே. (௭)

சித்தமேபுகுந்தெம்மையாட்கொண்டு
தீவினைகெடுத்துய்யலாம்
பத்திதந்துதன்பொற்கழற்கணே
பன்மலர்கொய்துசேர்த்தலு
முத்திதந்திந்தமூவுலகுக்கு
மப்புறத்தெமைவைத்திடு
மத்தன்மாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே. (௮

பிறவியென்னுமிக்கடலைநீந்தத்தன்
பேரருடந்தருளினா

னறவையென்றடியார்கடங்க
ளருட்குழாம்புகவிட்டுநல்
லுறவுசெய்தெனையுய்யக்கொண்ட
பிரான்றனுண்மைப்பெருக்கமாந்
திறமைகாட்டியசேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே. (௭)

புழுவினாற்பொதிந்திடுகுரம்பையிற்
பொய்தனையொழிவித்திடு
மெழில்கொள்சோதியெம்மீசனெம்பிரா
னென்னுடையப்பனென்றென்று
தொழுதகையினராகித்தூய்மலர்க்
கண்கணீர்மல்குந்தொண்டர்க்கு
வழுவிலாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே. (௮)

வம்பனாய்த்திரிவேனைவாவென்று
வல்வினைப்பகைமாய்த்திடு
மும்பரானுலகூடறுத்தப்
புறத்தனாய்நின்றவெம்பிரா
னன்பரானவர்க்கருளிமெய்யடி
யார்கட்கின்பந்தழைத்திடுஞ்
செம்பொன்மாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே. (௯)

முத்தனைமுதற்சோதியைமுக்க
ணப்பனைமுதல்வித்தினைச்
சித்தனைச்சிவலோகனைத்திரு
நாமம்பாடித்திரிதரும
பத்தர்காளிங்கேவம்மினீருங்கள்
பாசந்தீரப்பணிமினோ
சித்தமார்தருஞ்சேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# திருவார்த்தை.

அறிவித்தன் புறுதல்.
திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாதிவர்பாகன்மறைபயின்ற
வாசகன்மாமலர்மேயசோதி
கோதில்பரங்கருணையடியார்
குலாவுநீதிகுணமாகநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்த
வருளறிவாரெம்பிரானாவாரே. (௧)

மாலயன்வானவர்கோனும்வந்து
வணங்கவவர்க்கருளசெய்தவீசன்
ஞாலமதனிடைவந்திழிந்து
நன்னெறிகாட்டிநலந்திகழுங்
கோலமணியணிமாடநீடு
குலாவுமிடைவைமடநல்லாட்குச்
சீலமிகக்கருணையளிக்குந்
திறமறிவாரெம்பிரானாவாரே. (௨)

அணிமுடியாதியமரர்கோமா
னானந்தக்கூத்தனறுசமயம்
பணிவகைசெய்துபடவதேறிப்
பாரொடுவிண்ணும்பரவியேத்தப்
பிணிகெடநல்கும்பெருந்துறையெம்
பேரருளாளன்பெண்பாலுகந்து
மணிவலைகொண்டுவான்மீன்விசிறும்
வகையறிவாரெம்பிரானாவாரே. (௩)

வேடுருவாகிமகேந்திரத்து
மிகுகுறைவானவர்வந்துதன்னைத்
தேட விருந்தசிவபெருமான்
சிந்தனைசெய்தடியோங்களுய்ய

வாடலமர்ந்தபரிமாவேறி
ஐயன்பெருந்துறையாதியந்நா
ளேடாகவெயவகுமாண்டுகொண்ட
வியல்பறிவாரெம்பிரானுவாரே. (௪)

வந்திமையோர்கள்வணங்கியேத்த
மாக்கருணைக்கடலாயடியார
பந்தனைவிண்டறநல்குமெங்கள்
பரமன்பெருநதுறையாதியந்நா
ளுந்துதிரைக்கடலைக்கடநதன்
றோங்குமதிலிலங்கையதனிற்
பந்தணைமெல்விரலாட்கருளும்
பரிசறிவாரெம்பிரானுவாரே. (௫)

வேவத்திரிபுரஞ்செற்றவில்லி
வேடுவனாய்க்கடிநாய்கள்சூழ
வேவற்செயல்செய்யுந்தேவர்முன்னே
யெமபெருமான்றானியங்குகாட்டி
லேவுண்டபன்றிக்கிரங்கியீச
னெந்தைபெருந்துறையாதியன்று
கேவலங்கேழலாய்ப்பால்கொடுத்த
கிடப்பறிவாரெம்பிரானுவாரே. (௬)

நாதமுடையதோர்நற்கமலப்
போதினினண்ணியநன்னுதலார்
ரோதிப்பணிந்தலர்தூவியேத்த
வொளிவளர்சோதியெம்மீசன்மன்னும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்துதோன்றிப்
பேதங்கெடுத்தருள்செய்பெருமை
யறியவல்லாரெம்பிரானுவாரே. (௭)

பூவலர்கொன்றையமாலைமார்பன்
போருகிர்வன்புலிகொன்றவீரன்
மாதுநல்லாளுமைமங்கைபங்கன்
வண்பொழில்சூழ்தென்பெருந்துறைக்கோ

னேதில்பெரும்புகழெங்களீச
  னிருங்கடல்வாணற்குத்தீயிற்றோன்று
மோவியமங்கையர்தோள்புணரு
  முருவறிவாரெம்பிரானுவாரே. (௮)

தூவெள்ளைநீறணியெம்பெருமான்
  சோதிமகேந்திரநாதன்வந்து
தேவர்தொழும்பதம்வைத்தவீசன்
  றென்னன்பெருந்துறையாளியன்று
காதல்பெருகக்கருணைகாட்டித்
  தன்கழல்காட்டிக்கசிந்துருகக்
கேதங்கெடுத்தென்னையாண்டருளுங்
  கிடப்பறிவாரெம்பிரானுவாரே. (௯)

அங்கணனெங்களமரர்பெம்மா
  னடியார்க்கமுதனவனிவந்த
வெங்கள்பிரானிருமபாசந்தீர
  விகபரமாயதோரின்பமெய்தச்
சங்கங்கவர்ந்துவண்சாத்தினோடுஞ்
  சதுரன்பெருந்துறையாளியன்று
மங்கையர்மல்குமதுரைசேர்ந்த
  வகையறிவாரெம்பிரானுவாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## எண்ணப்பதிகம்.

---

ஒழியாவின்பத்துவகை.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

---

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாருருவாயபிறப்பறவேண்டும் பத்திமையும்பெறவேண்டு
ஞ்,சீருருவாயசிவபெருமானே செங்கமலமலர்போ, லாருரு
வாயவென்னாரமுதேயுன்னடியவர்தொகைநடுவே, யோருரு
வாயநின்றிருவருள்காட்டியென்னையுமுய்யக்கொண்டருளே

உரியேனல்லேனுனக்கடிமையுன்னைப்பிரிந்திங்கொருபொழுதுந், தரியேனாயேனினனதென்றறியேன்சங்கரா கருணையினாற், பெரியோனொருவன்கண்டுகொளென்றுன்பெய்கழலடிகாட்டிப், பிரியேனென்னென்றருளியவருளும்பொயயோவெங்கள்பெருமானே. (௨)

என்பேயுருகநின்னருளளித்துன் னிணைமலரடிகாட்டி, முன்பேயென்னையாண்டுகொண்ட முனிவாமுனிவாமுழுமுதலே, யின்பேயருளியெனையுருக்கி யுயிருண்கின்றவெம்மானே, நண்பேயருளாயென்னுயிர் நாதாநின்னருணாணே. (௩)

பத்திலனேனும்பணிந்திலனேனுமுன் னுயர்ந்தபைங்கழல்காணப், பித்திலனேனும்பிதற்றிலனேனும் பிறப்பறுப்பாயெம்பெருமானே, முத்தனையானேமணியனையானே முதல்வனேமுறையோவென, றெத்தனையானும்யான்றொடர்ந்துன்னையினிப்பிரிந்தாற்றேனே. (௪)

காணுமதொழிந்தேனின்றிருப்பாதங் கண்டுகண்களிகூரப், பேணுமதொழிந்தேன் பிதற்றுமதொழிந்தேன் பின்னையெம்பெருமானே, தாணுவேயழிந்தேனின்னினைந்துருகுந் தன்மையென்புன்மைகளாற், காணுமதொழிந்தே னீயினிவரினுங்காணவுநாணுவனே (௫)

பாற்றிருநீற்றெம்பரமனைப் பரங்கருணையோடுமெதிர்ந்து, தோற்றிமெய்யடியார்க்கருட்டுறையளிக்குஞ் சோதியை நீதியிலேன், போற்றியென்னமுதேயெனநினைந்தேத்திப் புகழ்ந்தழைத்தலறியென்னுள்ளே, யாற்றுவனாகவுடையவனே யெனையாவவென்றருளாயே. (௬)

திருச்சிற்றம்பலம்.

# யாத்திரைப்பத்து.

---

அநுபவாதீதமுரைத்தல்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்சென்னிமன்னனெம் புயங்கப்பெருமான் சிறியோமை, யோவாதுள்ளங்கலந்துணர்வாயுருக்கும்வெள்ளக்கருணையினா, லாவாவென்னப்பட்டன்பாயாட்பட்டீர்வந்தொருப்படுமின், போவோங்காலம்வந்ததுகாண் பொய்விட்டுடையான் கழல்புகவே. (௧)

புகவேவேண்டா புலன்களினீர் புயங்கப் பெருமான் பூங்கழல்கண், மிகவேநினைமின்மிக்கவெல்லாம் வேண்டாபோகவிடுமின்கள், நகவேஞாலத்துள்புகுந்து நாயேயனையநமையாண்ட, தகவேயுடையான்றனைச்சாரத் தளராதிருப்பார்தாந்தாமே. (௨)

தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்கு விதிவகையும், யாமாரெமதார்பாசமா ரென்ன மாயமிவைபோகக், கோமான்பண்டைத்தொண்டரொடு மவன்றன்குறிப்பேகுறிக்கொண்டு, போமாறமைமின்பொய்நீக்கிப் புயங்கனாள்வான்பொன்னடிக்கே. (௩)

அடியாரானீரெல்லீரு மகலவிடுமின்விளையாட்டைக், கடிசேரடியே வந்தடைந்து கடைக்கொண் டிருமின் றிருக்குறிப்பைச், செடிசேருடலைச்செலநீக்கிச் சிவலோகத்தேநமை வைப்பான், பொடிசேர்மேனிப்புயங்கன்றன் பூவார்கழற்கே புகவிடுமே. (௪)

விடுமின்வெகுளிவேட்கைநோய் மிகவோர்காலமினியில்லை, யுடையானடிக்கீழ்ப்பெருஞ்சாத்தோ டுடன்போவதற்கேயொருப்படுமி, னடைவோநாம்போய்ச்சிவபுரத்து ளணியார்கதவதடையாமே, புடைபட்டுருகிப்போற்றுவோம் புயங்கனாள்வான்புகழ்களையே. (௫)

புகழ்மின்றொழுமின்பூப்புனைமின்புயங்கன்றாளேபுந்திவை த்திட், டகழ்மினெல்லாவல்லலையு மினியோரிடையூறடை யாமே, திகழுஞ்சீரார்சிவபுரத்துச் சென்றுசிவன்றாள்வணங்கி நா, நிகழுமடியார்முன்சென்று நெஞ்சமுருகிநிற்போமே. ௬

நிற்பார்நிற்கநில்லாவுலகினில்லோமினிநாஞ்செல்வோமே, பொற்பாலொப்பாந்திருமேனிப் புயங்கனாள்வான்பொன்ன டிக்கே, நிற்பீரெல்லாந்தாழாதே நிற்கும்பரிசேயொருப்படுமி ன், பிற்பானின்றுபேழ்கணித்தாற் பெறுதற்கரியன்பெருமா னே. (௭)

பெருமான்பேரானந்தத்துப் பிரியாதிருக்கப்பெற்றீர்கா, ள ருமாலுற்றுப்பின்னைநீ ரம்மாவழுங்கியரற்றாதே, திருமாமணி சேர்திருக்கதவந் திறந்தபோதேசிவபுரத்துத், திருமாலறியாத்தி ருப்புயங்கன் றிருத்தாள்சென்றுசேர்வோமே. (௮)

சேரக்கருதிச்சிந்தனையைத்திருந்தவைத்துச்சிந்திமின், போ ரிற்பொலியும்வேற்கண்ணாள் பங்கன்புயங்கனருளமுத, மார ப்பருகியாராத வார்வங்கூரவழுந்துவீர், போரப்புரிமின்சிவ ன்கழற்கே பொய்யிற்கிடந்துபுரளாதே. (௯)

புரள்வார்தொழுவார்புகழ்வாரா யின்றேவந்தாளாகாதீர், ம ருள்வீர்பின்னைமதிப்பாரார் மதியுட்கலங்கிமயங்குவீர், தெரு ள்வீராகிலிதுசெய்மின் சிவலோகக்கோன்றிருப்புயங்க, னரு ளார்பெறுவாரகலிடத்தே யந்தோவந்தோவந்தோவே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# திருப்படையெழுச்சி.

பிரபஞ்சப்போர்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமி
னானநீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே. (௧)

தொண்டர்காடூசிசெல்லீர்பத்தர்காள்சூழப்போகீ
ரொண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்
ளண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே. (௨)

திருச்சிற்றம்பலம்.

# திருவெண்பா.

அணைந்தோர்தன்மை.

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன்-செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
மருவாதிருந்தேன்மனத்து. (௧)

ஆர்க்கோவரற்றுகோவாடுகோபாடுகோ
பார்க்கோபரம்பரனேயென்செய்கேன்-தீர்ப்பரிய
வானந்தமாலேற்றுமத்தன்பெருந்துறையான்
[illegible]ருனன்பாராரொருவர்தாழ்ந்து. (௨)

செய்தபிழையறியேன்சேவடியேகைதொழுதே
யுய்யும்வகையினுயிர்ப்பறியேன்-வையத்
திருந்துறையுள்வேன்மடுத்தென்சிந்தனைக்கேகோத்தான்
பெருந்துறையின்மேயபிரான். (௩)

முன்னைவினையிரண்டும்வேரறுத்துமுன்னின்றான்
பின்னைப்பிறப்பறுக்கும்பேராளன்-றென்னன
பெருந்துறையின்மேயபெருங்கருணையாளன்
வருந்துயரந்தீர்க்குமருந்து. (௪)

அறையோவறிவார்க்கனைத்துலகுமீன்ற
மறையோனுமாலுமால்கொள்ளு-மிறையோன்
பெருந்துறையுண்மேயபெருமான்பிரியா
திருந்துறையுமென்னெஞ்சத்தின்று. (௫)

பித்தென்னையேற்றும்பிறப்பறுக்கும்பேச்சரிதா
மத்தமேயாக்கும்வந்தென்மனத்தை-யத்தன்
பெருந்துறையாளுட்கொண்டுபேரருளாளனுக்கு
மருந்திறவாப்பேரின்பம்வந்து. (௬)

வாராவழியருளிவந்தெனக்குமாறின்றி
யாராவமுதாயமைந்தன்றே-சீரார்
திருத்தென்பெருந்துறையானென்சிந்தைமேய
வொருத்தன்பெருக்குமொளி. (௭)

யாவர்க்குமேலாமளவிலாச்சீருடையான்
யாவர்க்குங்கீழாமடியேனை-யாவரும்
பெற்றறியாவின்பத்துள்வைத்தாய்க்கென்னெம்பெருமான்
மற்றறியேன்செய்யும்வகை. (௮)

மூவருமுப்பத்துமூவருமற்றொழிந்த
தேவருங்காணாசிவபெருமான்-மாவேறி
வையகத்தேவந்திழிந்தவார்கழல்கள்வந்திக்க
மெய்யகத்தேயின்பமிகும். (௯)

இருந்தென்னையாண்டானிணையடியேசிந்தித்
திருந்திரந்துகொண்டெஞ்சேயெல்லாந்-தருங்காண்
பெருந்துறையின்மேயபெருங்கருணையாளன்
மருந்துருவாயென்மனத்தேவந்து. (௰)

இல்பட்பெருக்கியிருளகற்றியெஞ்ஞான்றுந்
துன்பந்தொடர்வறுத்துச்சோதியா-யன்பமைத்துச்
சீராபெருந்துறையானென்னுடையசிந்தையே
யூராகக்கொண்டானுவந்து. (௰௪)

திருச்சிற்றம்பலம்.

---

# பண்டாயநான்மறை

---

அனுபவத்துக்கையமின்மையுரைத்தல்.

திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

---

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாயநான்மறையும்பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக்கடையேனைத்-தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மாறுரை. (௧)

உள்ளமலமூன்றுமாயவுகுபெருந்தேன்
வெள்ளந்தரும்பரியின்மேல்வந்த-வள்ள்ல்
மருவும்பெருந்துறையைவாழ்த்துமின்கள்வாழ்த்தக்
கருவுங்கெடும்பிறவிக்காடு. (௨)

காட்டகத்துவேடன்கடலில்வலைவாணு
ணாட்டிற்பரிப்பாகனம்வினையை-வீட்டி
யருளும்பெருந்துறையானங்கமலபாத
மருளுங்கெடநெஞ்சேவாழ்த்து. (௩)

வாழ்ந்தார்களாவரும்வல்வினையைமாய்ப்பாருந்
தாழ்ந்துலகமேதத்தகுவாருஞ்-சூழ்ந்தமரா
சென்றிறைஞ்சியேத்துந்திருவார்பெருந்துறையை
நன்றிறைஞ்சியேத்துநமர். (௪)

நண்ணிப்பெருந்துறையைநம்மிடர்கள்போயகல
வெண்ணியெழுகோகழிக்கரசைப்-பண்ணின்
மொழியாளோடுத்தரகோசமங்கைமன்னிக்
கழியாதிருந்தவனைக்காண். (௫)

காணுங்கரணங்களெல்லாம்பேரின்பமெனப்
பேணுமடியார்பிறப்பகலக்-காணும்
பெரியானைநெஞ்சேபெருந்துறையிலென்றும்
பிரியானைவாயாரப்பேசு. (௬)

பேசும்பொருளுக்கிலக்கிதமாம்பேச்சிறந்த
மாசின்மணியின்மணிவார்த்தை-பேசிப்
பெருந்துறையேயென்றுபிறப்பறுத்தேனல்ல
மருந்தினடியென்மனத்தேவைத்து. (௭)

திருச்சிற்றம்பலம்.

---

# திருப்படையாட்சி.

---

சீவோபாதியொழிதல்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்களிரண்டுமவன்கழல்கண்டுகளிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வுகடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறுமறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும்வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல்பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்துவெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே. (௧)

ஒன்றினொடொன்றுமோரைந்தினொடைந்துமுயிர்ப்பறுமாகா
யுன்னடியாரடியாரடியோமெனவுய்ந்தனவாகாதே [தே
கன்றைநினைந்தெழுதாயெனவந்தகணக்கதுவாகாதே
காரணமாகுமனாதிகுணங்கள்கருத்துறுமாகாதே
நன்றிதுதீதெனவந்தநடுக்கநடந்தனவாகாதே
நாமுமேலாமடியாருடனேசெலநண்ணுதுமாகாதே
யென்றுமெனன்புநிறைந்தபராவமுதெய்துவதாகாதே
யேறுடையானெனையாளுடைநாயகனுள்புகுந்திடிலே.

பந்தவிகாரகுணங்கள்பறிந்துமறிந்திடுமாகாதே
பாவனையாயகருத்தினில்வந்தபராவமுதாகாதே
யந்தமிலாதவகண்டமுநம்முளகப்படுமாகாதே
யாதிமுதற்பரமாயபரஞ்சுடரண்ணுவதாகாதே
செந்துவர்வாய்மடவாரிடரானவைசிந்திடுமாகாதே
சேலனகண்களவன்றிருமேனிதிளைப்பனவாகாதே
யிந்திரஞாலவிடர்ப்பிறவித்துயரோகுவதாகாதே
யென்னுடைநாயகனாகியவீசனெதிர்ப்படுமாயிடிலே. (௩)

என்னணியார்முலையாகமளைந்துடனின்புறுமாகாதே
யெல்லையின்மாக்கருணைக்கடலின்றினிதாடுதுமாகாதே
நன்மணிநாதமுழங்கியெனுள்ளுறநண்ணுவதாகாதே
நாதனணித்திருநீற்றினைநித்தலுநண்ணுவதாகாதே
மன்னியவன்பரிலென்பணிமுந்துறவைகுவதாகாதே
மாமறையும்மறியாமலர்ப்பாதம்வணங்குதுமாகாதே
யின்னியற்செங்கழுநீர்மலரென்றலையெய்துவதாகாதே
யென்னையுடைப்பெருமானருளீசனெழுந்தருளப்பெறிலே. ௪

ம்ண்ணினின்மாயைமதித்துவகுத்தமயக்கறுமாகாதே
வானவரும்மறியாமலர்ப்பாதம்வணங்குதுமாகாதே
கண்ணிலிகாலமனைத்தினும்வநதகலக்கறுமாகாதே
காதல்செயும்மடியார்மனமின்றுகளித்திடுமாகாதே
பெண்ணலியாணெனநாமெனவந்தபிணக்கறுமாகாதே
பேரறியாதவனேகபவங்கள்பிழைத்தனவாகாதே
யெண்ணிலியாகியசித்திகள்வந்தெனையெய்துவதாகாதே
யெனனையுடைப்பெருமானருளீசனெழுந்தருளப்பெறிலே ௫

பொன்னியலுந்திருமேனிவெண்ணீறுபொலிந்திடுமாகாதே
பூமழைமாதவர்கைகள்குவிநதுபொழிந்திடுமாகாதே
மின்னியனுண்ணிடையார்கள்கருத்துவெளிப்படுமாகாதே
வீணைமுரன்றெழுமோசையிலின்பமிகுத்திடுமாகாதே
தன்னடியாரடியென்றலைமீதுதழைப்பனவாகாதே
தானடியோமுடனேயுயவந்துதலைப்படுமாகாதே
யின்னியமெங்குநிறைந்தினிதாகவியம்பிடுமாகாதே
யென்னைமுனாளுடையீசனெனத்தனெழுந்தருளப்பெறிலே.

சொல்லியலாதெழுதாமவுனியோசைசுவைதருமாகாதே [தே
தண்ணெனவென்னுள மன்னியசோதிதொடர்ந்தெழு மாகா
பல்லியல்பாயபரப்பறவந்தபராபரமாகாதே
பண்டறியாதபரானுபவங்கள்பரந்தெழுமாகாதே
வில்லியனன்னுதலார்மயலின்றுவிளைந்திடுமாகாதே
விண்ணவரும்மறியாதவிழுப்பொருளிப்பொருளாகாதே
யெல்லையிலாதனவெண்குணமானவையெயதிடுமாகாதே
யிந்துசிகாமணியெங்களையாளவெழுந்தருளப்பெறிலே. (எ)

சங்குதிரண்டுமுரன்றெழுமோசைதழைப்பனவாகாதே
சாதிவிடாதகுணங்கணமோடுசலித்திடுமாகாதே
யங்கிதுநன்றிதுநன்றெனுமாயையடங்கிடுமாகாதே
யாசையெலாமடியாரடியோமெனுமத்தனையாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தைதிகைப்பனவாகாதே
சீரடியார்கள்சிவானுபவங்களெரிந்திடுமாகாதே
யெங்குநிறைந்தமுதூறுபரஞ்சுடரெய்துவதாகாதே
யீறறியாமறையோனெனையாளவெழுந்தருளப்பெறிலே. (அ)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆனந்தமாலை.

---

சிவானுபவவிருப்பம்.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

---

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னேரனையபூங்கழல்களடைந்தார்கடந்தார்வியனுலகம், பொன்னேரனையமலர்கொண்டுபோற்றாநின்றாரமரரெல்லாங், கன்னேரனையமனக்கடையாய்க் கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த, வென்னேரனையேனினியுன்னைக்கூடுமெண்ணமியம்பாயே. (க)

என்னாலறியாப்பதந்தந்தாயானதறியாதேகெட்டே, னுன்னாலொன்றுங்குறைவில்லை யுடையாயடிமைக்காரென்பேன், பன்னாளுன்னைப்பணிந்தேத்தும்பழையவடியரொடுங்கூடா,தென்னாயகமேபிற்பட்டிங்கிருந்தேனோய்க்குவிருந்தாயே. (உ)

சீலமின்றிநோன்பின்றிச்செறிவேயின்றியறிவின்றித், தோலின்பாவைக்கூத்தாட்டாய்ச்சுழன்றுவிழுந்துகிடப்பேனை,மாலுங்காட்டிவழிகாட்டிவாராவுலகநெறியேறக், கோலங்காட்டியாண்டானைக்கொடியேனென்றேகூடுவதே. (௩)

கெடுவேன்கெடுமாகெடுகின்றேன்கேடிலாதாய்பழிகொண்டாய், படுவேன்படுவதெல்லாநான்பட்டாற்பின்னைப்பயனென்னே, கொடுமாநரகத்தழுந்தாமேகாத்தாட் கொள்ளுங்குருமணியே, நடுவாய்நில்லாதொழிந்தக்கா லன்றேவெங்கணுயகமே. (௪)

தாயாய்முலையைத்தருவானே தாராதொழிந்தாற்சவலையாய், நாயேன்கழிந்துபோவேனோநம்பியினித்தானல்குதியே,தாயேயென்றுன்றாளடைந்தேன்றயாநீயென்பாலில்லையே, நாயேனடிமையுடனாகவாண்டாய்நான்றான்வேண்டாவோ. (௫)

கோவேயருளவேண்டாவோ கொடியேன்கெடவேயமையுமே,யாவாவென்னாவிடிலென்னையஞ்சேலென்பாராரோதான, சாவாரெல்லாமென்னளவோதக்கவாறன்றென்னாரோ, தேவேதில்லைநடமாடதிகைத்தேனினித்தான்றேற்றாயே. (௬)

நரியைக்குதிரைப்பரியாக்கிஞாலமெல்லாநிகழ்வித்துப்,பெரியதென்னன்மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறையா, யரியபொருளேயவநாசியப்பாபாண்டிவெள்ளமே,தெரியவரியபரஞ்சோதீசெய்வதொன்றுமறியேனே. (௭)

திருச்சிற்றம்பலம்.

---

## அச்சோப்பதிகம்.

---

அனுபவவழியறியாமை.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

---

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணஞ்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௧)

நெறியல்லாநெறிதன்னைநெறியாகநினைவேனைச
சிறுநெறிகள்சேராமேதிருவருளேசேரும்வண்ணங
குறியொன்றுமில்லாதகூத்தன்றன்கூத்தையெனக
கறியும்வண்ணமருளியவாறார்பெறுவாரச்சோவே. (௨)

பொய்யெல்லாமெய்யென்றுபுணர்முலையார்போகத்தே
மையலுறக்கடவேனைமாளாமேகாத்தருளித்
தையலிடங்கொண்டபிரான்றன்கழலேசேரும்வண்ண
மையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௩)

மண்ணதனிறபிறந்தெய்த்துமாண்டுவிழக்கடவேனை
யெண்ணமிலாவன்பருளி யெனையாண்டிட்டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீறணிவித்துத்தூயநெறியேசேரும்வண்ண
மண்ணலெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௪)

பஞ்சாயவடிமடவார்கடைக்கண்ணாலிடர்ப்பட்டு
நெஞ்சாயதுயர்கூரநிற்பேனுன்னருள்பெற்றே
னுய்ஞ்சேனானுடையானேயடியேனைவருகவென்
றஞ்சேலென்றருளியவாறார்பெறுவாரச்சோவே. (௫)

வெந்துவிழுமுடற்பிறவிமெய்யென்றுவினைபெருக்கிக்
கொந்துகுழற்கோல்வளையார்குவிமுலைமேல்வீழ்வேனைப்
பந்தமறுத்தெனையாண்டுபரிசறவென்றுரிசுமறுத்
தந்தமெனக்கருளியவாறார்பெறுவாரசசோவே. (௬)

தையலார்மையலிலேதாழ்ந்துவிழக்கடவேனைப்
பையவேகொடுபோந்துபாசமெனுந்தாழுருவி
யுய்யுநெறிகாட்டுவித்திட்டோங்காரத்துட்பொருளை
யையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௭)

சாதல்பிறப்பென்னுந்தடஞ்சுழியிற்றடுமாறிக்
காதலின்மிக்கணியிழையார்கலவியிலேவிழுவேனை
மாதொருகூறுடையபிரான்றன்கழலேசேரும்வண்ண
மாதியெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௮)

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்றா
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௯)

திருச்சிற்றம்பலம்.

திருவாசகம் முற்றுப்பெற்றது.

உ

கணபதி துணை.

---

திருச்சிற்றம்பலம்.

# திருக்கோவையார்

என்கின்ற

# திருச்சிற்றம்பலக்கோவை.



## விநாயக வணக்கம்.

எண்ணிறைந்ததில்லையெழுகோபுரந்திகழக
கண்ணிறைந்துநின்றருளுங்கற்பகமே-நண்ணியசீர்த்
தேனூறுசெஞ்சொற்றிருககோவையெனகின்ற
நானூறுமென்மனத்தேநல்கு.

## நூற்சிறப்பு.

ஆரணங்காணென்பரந்தணர்யோகியராகமத்தின்
காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலதென்ப
ரேரணங்காணென்பரெண்ணரெழுத்தென்பரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே.

இவ்விரண்டுசெய்யுளும் பிற்காலத்து
ஆன்றோராற் செய்யபபட்ட

முதலாவது
# இயற்கைப்புணர்ச்சி.

காட்சி.

மதிவாணுதல்வளர்வஞ்சியைக்
கதிர்வேலவன்கண்ணுற்ற து.

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக் [ய்வ
குருவளர்பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண்டோங்குதெ
மருவளர்மாலையொர்வல்லியினொல்கியனநடைவாய்ந்
துருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றொளிர்கின்றதே.

ஐயம்.

தெரியவரியதோர்தெய்வமென்ன
அருவரைநாடனையுற்ற து.

போதோவிசும்போபுனலோபணிகளதுபதியோ
யாதோவறிகுவதேதுமரிதியமன்விடுத்த
தூதோவனங்கன்றுணையோவிணையிலிதொல்லைத்தில்லை
மாதோமடமயிலோவெனநின்றவர்வாழ்பதியே. (௨)

தெளிதல்.

அணங்கல்லளென்றயில்வேலவன்
குணங்களைநோக்கிக்குறித்துரைத்தது.

பாயும்விடையரன்றில்லையன்னாள்படைக்கண்ணிமைக்குந்
தோயுநிலத்தடிதூமலர்வாடுந்துயரமெய்தி
யாயுமனனேயணங்கல்லளம்மாமுலைசுமந்து
தேயுமருங்குற்பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே. (௩)

நயப்பு.

வண்டமர்புரிகுழலொண்டொடிமடந்தையை
நயந்தவண்ணல்வியந்துள்ளிய து.

அகல்கின்றவல்குற்றடமதுகொங்கையவையவஞ்
புகல்கின்றதென்னைநெஞ்சுண்டேயிடையடையார்புரங்க
ளிகல்குன்றவில்லிற்செற்றோன்றில்லையீசனெம்மானெதிர்ந்த
பகல்குன்றபல்லுகுத்தோன்பழனம்மன்னபல்வளைக்கே (௪)

உட்கோள்.

இறைதிருக்கரத்துமறிமானோக்கி
யுள்ளக்கருத்துவள்ளலறிந்த து.

அணியுமமிழ்துமென்னாவியுமாயவன்றில்லைச்சிந்தா
மணியும்பராரறியாமறையோனடிவாழ்த்தலரிற்
பிணியுமதற்குமருந்தும்பிறழப்பிறழுமின்னும்
பணியும்புரைமருங்குற்பெருந்தோளிபடைக்கண்களே. (௫)

தெய்வத்தைமகிழ்தல்.

அன்னமென்னடையரிவையைத்தந்
மன்னிருந்தெய்வத்தைமகிழ்ந்துரைத்தது.

வளைபயில்கீழ்கடனின்றிடமேல்கடல்வானுகத்தின்
றுளைவழிநேர்கழிகோத்தெனத்தில்லைத்தொல்லோன்கயிலைக்
கிளைவயினீக்கியிக்கெண்டையங்கண்ணியைக்கொண்டுதந்த
விளைவையல்லால்வியவேனயவேனெய்வமிக்கனவே. (௬)

புணர்ச்சிதுணிதல்.

கொவ்வைச்செவ்வாய்க்கொடியிடைப்பேதையைத்
தெய்வப்புணர்ச்சிசெம்மறுணர்ந்தது.

ஏழுடையான்பொழிலெட்டுடையான்புயமென்னைமுன்னா
ளூழுடையான்புலியூரன்னபொன்னிவ்வுயர்பொழில்வாய்ச
சூழுடையாயத்தைநீக்கும்விதிதுணையாமனனே
யாழுடையார்மணங்காணணங்காய்வந்தகப்பட்டதே. (௭)

கலவியுரைத்தல்.

கொலைவேலவன்கொடியிடையொடு
கலவியின்பங்கட்டுரைத்தது

சொற்பாலமிழ்திவள்யான்சுவையென்னத்துணிந்திங்ஙனே
நற்பால்வினைத்தெய்வந்தந்தின்றுநானிவளாம்பகுதிப்
பொற்பாரறிவார்புலியூர்ப்புனிதன்பொதியில்வெற்பிற்
கற்பாவியவரைவாய்க்கடிதோட்டகளவகத்தே. (௮)

இருவயினொத்தல்.

ஆராவின்பத்தன்புமீதூர
வாராமுலையைமகிழ்ந்துரைத்தது.

உணர்ந்தார்க்குணர்வரியோன்றில்லைச்சிற்றம்பலத்தொருத்தன், குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்வாயிக்கொடியிடைதோள், புணர்ந்தாற்புணருந்தொறும்பெரும்போகமபின்னும்புதிதாய், மணந்தாழ்புரிகுழலாளல்குலபோல வளர்கின்றதே. (௯)

கிளவிவேட்டல்.

அன்னமன்னவளையவங்கண்டு
மென்மொழிகேட்கவிருப்புற்றது.

அளவியையார்க்குமறிவரியோன்றில்லையம்பலம்போல்
வளவியவான்கொங்கைவாட்டடங்கண்ணுதன்மாமதியின்
பிளவியன்மின்னிடைபேரமைதோளிதுபெற்றியென்றாற்
கிளவியையென்னோவினிக்கிள்ளையார்வாயிற்கேட்கின்றதே.

நலம்புனைந்துரைத்தல்.
பொங்கிழையைப்புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலோனயாவுநீங்கிய து.

கூம்பலங்கைத்தலத்தன்பரென்பூடுருகக்குனிக்கும்
பாம்பலங்காரப்பரன்றில்லையம்பலம்பாடலரிற்
றேம்பலஞ்சிற்றிடையீங்கிவடீங்கனிவாய்கமழு
மாம்பலம்போதுளவோவளிகாணுமகன்பணையே. (௰௧)

பிரிவுணர்த்தல்.
பணிவளரல்குலைப்பயிராப்புறுத்தி ப்
பிணிமலர்த்தாரான்பிரிவுணர்த்தியது.

சிந்தாமணிதெண்கடலமிர்தந்தில்லையானருளால்
வந்தாலிகழப்படுமேமடமான்விழிமயிலே
யந்தாமரையன்னமேநின்னையானகன்றாற்றுவனோ
சிந்தாகுலமுற்றென்னோவென்னைவாட்டந்திருத்துவதே (௰௨)

பருவரலறிதல்.
பிரிவுணர்ந்தபெண்கொடிதன்
பருவரலின்பரிசுநினைந்த து.

கோங்கிற்பொலியரும்பேயகொங்கைபங்கன்குறுகலரூர்
தீங்கிற்புகச்செற்றகொற்றவன்சிற்றம்பலமனையா
ணீங்கிற்புணர்வரிதென்றோநெடிதிங்ஙனேயிருந்தா
லாங்கிற்பழியாமெனவோவறியேனயர்கின்றதே. (௰௩)

அருட்குணமுரைத்தல்.
கூட்டியதெய்வத்தின்னருட்குணம்
வாட்டமின்மைவள்ளலுரைத்த து.

தேவரிற்பெற்றநஞ்செல்வக்கடிவடிவார்திருவே
யாவரிற்பெற்றினியார்சிதைப்பாரிமையாதமுக்கண்
மூவரிற்பெற்றவர்சிற்றம்பலமணிமொய்பொழில்வாய்ப்
பூவரிற்பெற்றகுழலியென்வாடிப்புலம்புவதே. (௰௪)

இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.
மடவரலைவற்புறுத் தி
இடமணித்தென்றவணியம்பியது.

வருங்குன்றமொன்றுரித்தோன்றில்லையம்பலவன்மலயத்
திருங்குன்றவாணரிளங்கொடியேயிடரெய்தலெம்மூர்ப்
பருங்குன்றமாளிகைநுண்களபத்தொளிபாயநும்மூர்க்
கருங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங்கனங்குழையே.

ஆடிடத்துய்த்தல்.

வன்புறையினைப் புறத்தே தி

அனபுறுமொழியையருக்கன்றது.

தெளிவளர்வானசிலை செங்கனிவெண்முத்தந் திங்களின்வாய

தளிவளர்வல்லியன்னயமுன்னியாடுபின்னையானவா [ந

வொளிவளர்தில்லையொருவனகயிலையுகுபெருந்தேன்

றுளிவளர்சாரற்கரந்துங்ஙனேவந்துதோன்றுவனே. (௰௬)

அருமையறிதல்.

சுற்றமு மிடனுஞ் சூழலு நோக்கி

மற்றவளருமைமன்னனறிந்தது.

புணர்ப்போனிலனும்விசும்புமபொருப்புந்தன்பூங்கழலின, றுணர்ப்போதெனக்கணி யாக்குந்தொல்லோனறில்லைச் சூழ் பொழில்வா,யிணர்ப்போதணிகுழலேழைதன் னீர்மையிந்நீர் மையெனறாற்,புணர்ப்போகனவோபிறிதோவறியேன் புகுந்த துவே. (௰௭)

பாங்கியையறிதல்.

கடல்புரையாயத்துக்காதற்றோழியை

மடவரல்காட்டமன்னனறிந்த து.

உயிரொன்றுளமு மொன்றொன்றே சிறப்பிவட்கென்றொ டெனனப்,பயில்கின்றசென்றுசெவியுற்றீளபடைக்கணகளவி ணவாயச, செயிரொன்றுமுப்புரஞ்செற்றவனறில்லைச்சிற்றம பலத்துப,பயில்கின்றகூத்தனருளெனலாகுமபணிமொழிக்கே

இரண்டாவது

## பாங்கற்கூட்டம்.

பாங்கனை நினைதல்.

எய்துதற்கருமையேழையிற்றோன்றப்

பையுளுற்றவன்பாங்கனை நினைந்தது.

பூங்கனையார்புனற்றென்புலியூர்புரிந்தம்பலத்து

ளாங்கெனையாண்டுகொண்டாடுமபிரானடித்தாமரைக்கே

பாங்கனையானன்னபண்பனைக்கண்டிப்பரிசுரைத்தா

லீங்கெனையார்தடுப்பார்மடப்பாவையையெய்துதற்கே. (௰௮)

பாங்கன்வினாதல.

கலிகெழுதிரடோண்மெலிவதுகண்

இனனுயிர்ப்பாங்கன்மன்னனைவினாயது.

சிறைவானபுனற்றில்லைச்சிற்றம்பலத்துமென்சிந்தையுள்ளு

முறைவானுயர்மதிற்கூடலினாய்ந்தவொண்டீந்தமிழின

றுறைவாய்நுழைந்தனையோவன்றியேழிசைச்சூழல்புக்கோ

விறைவாதடவரைத்தோட்கென்கொலாம்புகுந் தெய்தியதே.

உற்றதுரைத்தல்.

மற்றவன்வினவ
உற்றதுரைத்தது.

கோம்பிக்கொதுங்கிமேயாமஞ்ஞைகுஞ்சரங் கோளிழைக்கும்
பாம்பைப்பிடித்துப்படங்கிழித்தாங்கப்பணைமுலைக்கே
தேம்பற்றுடியிடைமான்மடநோக்கிதில்லைச்சிவன்றா
ளாம்பொற்றடமலர்சூடுமென்னாற்றலகற்றியதே. (௨௧)

கழறியுரைத்தல்.

வெற்பனைத்தன்மெய்ப்பாங்கன்
கற்பனையிற்கழறியது.

உளமாம்வகைநம்மையுய்யவந்தாண்டுசென்றும்பருய்யக்
களமாம்விடமமிர்தாக்கியதில்லைத்தொல்லோன்கயிலை
வளமாம்பொதும்பரின்வஞ்சித்துநின்றொர்வஞ்சிமருங்கு
லிளமான்விழித்ததென்றோவின்றெம்மண்ணலிரங்கியதே. ௨௨

கழற்றெதிர்மறுத்தல்.

ஆங்குயிரன்னபாங்கன்கழற
வளந்தருவெற்பனுளந்தளர்ந்துரைத்தது.

சேணிற்பொலிசெம்பொன்மாளிகைதில்லைச் சிற்றம்பலத்து
மாணிக்கக்கூத்தன்வடவான்கயிலைமயிலைமன்னும் [தைக்
பூணிற் பொலிகொங்கை யாவியையோவியப் பொற்கொழுந்
காணிற்கழறலைகண்டிலைமென்றோட்கரும்பினையே. (௨௩)

கவன்றுரைத்தல்.

கோலக்களிற்றண்ணல்குறைநயந்துரைப்பக்
கலக்கஞ்செய்பாங்கன்கவன்றுரைத்தது.

விலங்கலைக்கால்விண்டுமேன்மேலிடவிண்ணுமண்ணுமுந்நீர்
கலங்கலைச்சென்றவன்றுங்கலங்காய்கமழ்கொன்றைதுன்று[ங்
மலங்கலைச்சூழ்ந்தசிற்றம்பலத்தானருளில்லவர்போற்
றுலங்கலைச்சென்றிதென்னோவள்ளலுள்ளந்துயர்கின்றதே௨௪

வலியழிவுரைத்தல்.

நிறைபொறைதேற்றநீதியொடுசால்
மறியுறுநோக்கிற்குவாடினேனென்றது.

தலைப்படுசால்பினுக்குந்தளரேன்சித்தம்பித்தனென்று
மலைத்தறிவாரில்லையாரையுந்தேற்றுவனெத்துணையுங்
கலைச்சிறுதிங்கண்மிலைத்தசிற்றம்பலவன்கயிலை
மலைச்சிறுமான்விழியாலழிவுற்றுமயங்கினனே. (௨௫)

விதியொடுவெறுத்தல.

கல்விமிகுபாங்கன்கழறவெளகிச்
செல்வமிகுசிலம்பன்றெரிந்துசெப்பியது.

நல்வினையுந்நயந்தந்தின்றுவந்துநடுங்குமின்மேற்
கொல்வினைவல்லன கோங்கரும்பாமென்றுபாங்கன்சொல்ல
வில்வினைமேருவில்வைத்தவன்றில்லைதொழாரின்வெள்கித்
தொல்வினையாற்றுயரும்மெனதாருயிரதுப்புறவே. (உ௬)

பாங்கனொந்துரைத்தல்.

இன்னுயிர்ப்பாங்கனேழையைச்சுட்டி
நின்னதுதன்மைநினைந்திலையெனறது.

ஆலத்தினாலமிர்தாக்கியகோன்றில்லையம்பலம்போற்
கோலத்தினாள்பொருட்டாகவமிர்தங்குணங்கெடினுங்
காலத்தினான்மழைமாறினுமாறாக்கவிகைநின்பொற்
சீலத்தைநீயுநினையாதொழிவதென்றீவினையே. (உ௭)

இயலிடங்கேட்டல்.

கழுமலெய்தியகாதற்றோழன்
செழுமலைநாடனைத்தெரிந்துவினாயது.

நின்னுடைநீர்மையுநீயுமிவ்வாறுநினைத்தெருட்டு [க்கண்
மென்னுடைநீர்மையிதெனவென்பதேதில்லையோர் கொண்மு
மன்னுடைமால்வரையோமலரோவிசும்போசிலம்பா
வென்னிடம்யாதியனின்னையினனேசெய்தவீர்ங்கொடிக்கே.

இயலிடங்கூறல்.

அழுங்கலெய்தியவாருயிர்ப்பாங்கற்குச்
செழுங்கதிர்வேலோனறெரிந்துசெப்பியது.

விழியாற்பிணையாம்விளங்கியலான்மயிலாமிழற்று
மொழியாற்கிளியாமுதுவானவாதமுடித்தொகைகள்
கழியாக்கழற்றில்லைக்கூத்தன்கயிலைமுத்தம்மலைத்தேன்
கொழியாததிகழும்பொழிற்கெழிலாமெனகுலதெய்வமே. உ௯

வற்புறுத்தல்.

பெயர்ந்துரைத்தபெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன்வற்புறுத்தியது.

குயிலைச்சிலம்படிக்கொம்பினைத்தில்லையெங்கூத்தப்பிரான்
கயிலைச்சிலம்பிற்பைம்பூம்புனங்காக்குங்கருங்கட்செவ்வாய்
மயிலைச்சிலம்பகண்டியான்போய்வருவன்வண்பூங்கொடிகள
பயிலச்சிலம்பெதிர்கூய்ப்பண்ணைநண்ணும்பளிக்கறையே.

குறிவழிச்சேறல்.

அறைகழலண்ணலருளின்வழியே
நிறைவுடைப்பாங்கனினைவொடுசென்றது.

கொடுங்கால்குலவரையேழேழ்பொழிலெழில்குன்றுமன்று
நடுங்காதவனைநடுங்கநுடங்குநடுவுடைய
விடங்காலயிற்கண்ணிமேவுங்கொலாந்தில்லையீசன்வெற்பிற்
படங்கார்தருபெருவான்பொழினீழலந்தண்புனத்தே (௫௧)

குறிவழிக்காண்டல்.

குளிர்வரைநாடன்குறிவழிச்சென்று
தளிர்புரைமெல்லடித்தையலைக்கண்டது.

வடிக்கணிவைவஞ்சியஞ்சுமிடையிதுவாய்பவளந்
துடிக்கின்றவாவெற்பன்சொற்பரிசேயான்றொடர்ந்துவிடா
வடிச்சந்தமாமலரண்ணல்விண்ணோர்வணங்கம்பலம்போற்
படிச்சந்தமுமிதுவேயிவளேயப்பணிமொழியே. (௫௨)

தலைவனைவியந்துரைத்தல்.

நயந்தவுருவுநலனுங்கண்டு
வியந்தவனையேமிகுத்துரைத்தது.

குவளைக்களத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்
தவளைப்பயங்கரமாகநின்றாண்டவவயவத்தி
னிவளைக்கண்டிங்குநின்றாங்குவந்தத்துணையும்பகர்ந்த
கவளக்களிற்றண்ணலேதிண்ணியானிக்கடலிடத்தே. (௫௩)

கண்டமைகூறல்.

பிடிமிசைவைத்துப்பேதையதுநிலைமை
அடுதிறலண்ணற்கறியவுரைத்தது.

பணந்தாழரவரைச்சிற்றம்பலவர்பைம்பொற்கயிலை
புணர்ந்தாங்ககன்றபொருகரியுன்னிப்புனத்தயலே
மணந்தாழ்பொழிற்கண்வடிக்கண்பரப்பிமடப்பிடிவாய்
நிணந்தாழ்சுடரிலைவேலகண்டேனொன்றுநின்றதுவே. (௫௪)

செவ்விசெப்பல்.

அற்புதன்கயிலைமற்பொலிசிலம்பற்
கவ்வுருக்கண்டவன்செவ்விசெப்பியது.

கயலுளவேகமலத்தலர்மீதுகனிபவளத்
தயலுளவேமுத்தமொத்தநிரையரனம்பலத்தி
னியலுளவேயிணைச்செப்புவெற்பாநினதீங்கொடிமேற்
புயலுளவேமலர்சூழ்ந்திருடூங்கிப்புரள்வனவே. (௫௫)

அவ்விடத்தேகல்.
அரிவையதுநிலைமையறிந்தவனுரைப்ப
வெறிகதிர்வேலோனேகிய

எயிற்குலமூன்றிருந்தீயெய்தவெய்தவன்றில்லையொத்துக்
குயிற்குலங்கொண்டு தொண்டைக்கனிவாய்க்குளிர் முத்தந்
தயிற்குலவேல்கமலத்திற்கிடத்தியனநடக்கு [ரைத்த
மயிற்குலங்கண்டதுண்டேலதுவென்னுடைமன்னுயிரே

மின்னிடைமெலிதல்.
மன்னனினைந்தது
மின்னிடைமெலிந்தது.

ஆவியன்னாய்கவலேலகலேமென்றளித்தொளித்த
வாவியன்றாமிக்கவாவினராய்க்கெழுமற்கழிவுற்
றாவியன்றாமன்னியாடிடஞ்சோவாகொலம்பலத்தெம்
மாவியனான்பயிலுங்கயிலாயத்தருவரையே. (௧௭)

பொழில்கண்டுமகிழ்தல்.
மணங்கமழ்பொழிலின்வடிவுகண்
டணங்கெனநினைந்தயர்வுநீங்கியது.

காம்பிணையாற்களிமாமயிலாற்கதிர்மாமணியால்
வாம்பிணையால்வல்லியொல்குதலான்மன்னுமம்பலவன்
பாம்பிணையாக்குழைகொண்டோன்கயிலைப்பயில்புனமுந்
தேம்பிணைவார்குழலாளெனத்தோன்றுமென்சிந்தனைக்கே. ௧௮

உயிரெனவியத்தல்.
வெறியுறுபொழிலின்வியனபொதும்பரி
னெறியுறுகுழலிநிலைமைகண்டது.

நேயத்ததாய்நென்னலென்னைப்புணர்ந்து நெஞ்சநெகப்போ
யாயத்ததாயமிழ்தாயணங்காயரனம்பலம்போற்
றேயத்ததாயென்றன்சிந்தையதாய்த்தெரியிற்பெரிது
மாயத்ததாகியிதோவந்துநின்றதென்மன்னுயிரே. (௧௯)

தளர்வகன்றுரைத்தல்.
பனிமதிநுதலியைப்பைம்பொழிலிடைத்
தனிநிலைகண்டுதளர்வகன்றுரைத்தது

தாதிவர்போதுகொய்யார்தையலாரங்கைகூப்பநின்று
சோதிவரிப்பந்தடியார்சுனைப்புனலாடல்செய்யார்
போதிவர்கற்பகநாடுபுல்லென்னத்தம்பொன்னடிப்பா
யாதிவர்மாதவமம்பலத்தான்மலையெய்துதற்கே. (௨௰)

மொழிபெறவருந்தல்.

கூடற்கரிதெ ன
வாடியுரைத்த து.

காவிநின்றேர்தருகண்டாவண்டில்லைக்கண்ணுர்கமலத்
தேவியெனஞ்றேயையஞ்சென்றதன்றேயுறியச்சிறிது
மாவியன்றன்னமெனஞேக்கிநின்வாய்திறவாவிடிலென்
ஞவியன்றேயமிழ்தேயணங்கேயின்றழிகின்றதே. (௪௧)

நாணிக்கண்புதைத்தல்.

ஆயிடைத்தனிநின்ருற்ருதழிந து
வேயுடைத்தோளியோாமென்கொடிமறைந்த து.

அகலிடந்தாவியவாஞேனறிந்திறைஞ்சம்பலத்தி
னிகலிடந்தாவிடையீசற்ருெழாரினின்னற்கிடமா
யுகலிடந்தான்சென்றெனதுயிர்நையாவகையொதுங்கப்
புகலிடந்தாபொழில்வாயெழில்வாய்தருபூங்கொடியே. (௪௨)

கண்புதைக்கவருந்தாநிற்றல்.

வேற்றருங்கண்ணிணைமிளிர்வனவன்றுநின்
கூற்றருமேனியேகூற்றெனக்கென்ற து.

தாழச்செய்தார்முடிதன்னடிக்கீழ்வைத்தவரைவிண்ணோ
ருழசசெய்தானம்பலங்கைதொழாரினுள்ளந்துளங்கப் [ னைநீ
போழச்செய்யாமல்வைவேற்கண்புதைத்துப்பொன்னேயென்
வாழசசெய்தாய்சுற்றுமுற்றும்புதைநின்னைவாணுதலே. (௪௩)

நாண்விடவருந்தல்.

ஆங்ஙனங்கண்டாற்ருளா கி
நீங்கினநாணொடுநேரிழைநின்றது.

குருநாண்மலாப்பொழில்சூழ்தில்லைக்கூத்தனை யேத்தலாபோ
வருநாள்பிறவற்கவாழியரோமற்றென்கண்மணிபோன் [ல
ெருநாள்பிரியாதுயிரிற்பழகியுடன்வளர்ந்த
வருநாணளியவழல்சோமெழுவொத்தழிகின்றதே. (௪௪)

மருங்கணைதல்.

ஒளிதிகழ்வார்குழலளிகுலம்விலக்கிக்
கருங்களிற்றண்ணன்மருங்கணைந்தது.

கோலத்தனிக்கொம்பரும்பர்புக்கஃதேகுறைப்பவர்தஞ்
சீலத்தனகொங்கைதேற்றகிலேஞ்சிவன்றில்லையன்ன [யாற்
ஞாலொத்தநேரிடை நொய்ம்மையெண்ணுது நுண்டேனசை
சாலத்தகாதுகண்டீர்வண்டுகாள்கொண்டைசார்வதுவே (௪௫)

இன்றியமையாமைகூறல்.
வென்றிவேலவன்மெல்லியறன
கின்றியமையாமையெடுத்துரைத்த து.
நீங்கரும்பொற்கழற்சிற்றம்பலவாநெடுவிசும்பும்
வாங்கிருந்தெண்கடல்வையமுமெய்தினும்யான்மறவேன்
றீங்கரும்பும்மமிழ்துஞ்செழுந்தேனும்பொதிந்துசெப்புங்[ளே.
கோங்கரும்புநதொலேத்தென்னையு மாட் கொண்டகொங்கைக

ஆயததுய்த்தல்.
தேங்கமழ்சிலம்ப ன்
பாங்கிற்கூட்டிய து.
சூளாமணியும்பர்க்காயவன்சூழ்பொழிற்றில்லையன்னாய்க்
காளாயொழிந்ததென்னுருயிராரமிழ்தேயணங்கே
தோளாமணியேபிணையேபலசொல்லியென்னைதுன்னு
நாளார்மலர்பபொழில்வாயெழிலாயநணுகுகவே. (சஎ)

நின்றுவருந்தல்.
பாங்கிற்கூட்டிப்பதிவயிற்பெயர்வோ
னீங்கற்கருமைநின்றுநினைந்த து.
பொய்யுடையார்க்கரனபோலகலும்மகன்ருற்புனரின்
மெய்யுடையார்க்கவனம்பலம்போலமிகநணுகு
மையுடைவாட்கண்மணியுடைப்பூண்முலைவாணுதல்வான்
பையுடைவாளரவசதல்குல்காக்கும்பைம்பூம்புனமே. (சஅ)

மூன்ருவது

## இடந்தலைப்பாடு.

பொழிலிடைச்சேறல்.
ஐயரிக்கண்ணியையாடிடத்தேசெ ன்
றெய்துவனெனநினைந்தேந்தல்சென்றது.
என்னறிவால்வந்ததன்றிது முன்னுமின்னும்முயன்ருன்
மன்னெறிதந்ததிருந்தன்றுதெய்வம்வருந்தனெஞ்சே
மின்னெறிசெஞ்சடைக்கூத்தப்பிரான்வியன்றில்லைமுந்நீர்
பொன்னெறிவார்துறைவாய்ச்சென்றுமின்ரேய்பொழிலிடத்
[தே

நான்காவது

## மதியுடன்படுத்தல்.

பாஙகியிடைச்சேறல்
கரந்துறைகிளவியிற்காதற்ரேழி யை
இரந்துகுறையுறுவலெனறேந்தல்சென்றது.
எளிதன்றினிக்கனிவாய்வல்லிபுல்லலெழின்மதிக்கீற்
றொளிசென்றசெஞ்சடைக்கூத்தப்பிரானையுன்னுரினென்கட்

டெளிசென்றவேற்கண்வருவித்தசெல்லலெல்லாந்தெளிவித்
தளிசெனறபூங்குழற்றோழிக்குவாழியறிவிப்பனே. (௫0)

குறையுறத்துணிதல்.

ஓரிடத்தவனையொருங்குகண்டுதன்
பேரிடாபெருந்தகைபேசத்துணிந்தது.

குவளைக்கருங்கட்கொடியேரிடையிக்கொடிகடைக்க
ணுவளைத்தனதுயிரொன்றதுதன்னெடுவமையில்லா
தவளைத்தன்பால்வைத்தசிற்றமபலத்தானருளிலர்போற்
றுவளததலைவந்தவின்னலின்னேயினிச்சொல்லுவனே. (௫க)

வேழம்வினாதல்.

ஏழையரிருவருமிருநதசெவ்வியுன்
வேழம்விணுஅய்வெற்பன்சென்றது.

இருங்களியாயின்றியானிறுமாப்பவின்பம்பணிவோர்
மருங்களியாவனலாடவல்லோன்றில்லையான்மலையீங
கொருங்களியார்ப்பவுமிழ்மும்மதத்திரு கோட்டொருநீள்
கருங்களியார்மதயானையுண்டோவரக்கண்டதுவே. (௫௨)

கலைமான்வினாதல்.

சிலைமானண்ணல்
கலைமான்வினாயது.

கருங்கண்ணனையறியாமைநின்றோன்றில்லைக்கார்ப் பொழில்
வருங்கண்ணனையவண்டாடும்வளரிளவல்லியன்னீ [வாய
ரிருங்கண்ணனையகணைபொருபுண்புணரிப்புனதநின்
மருங கண்ணனையதுண்டோவநததீங்கொருவான்கலையே (௫௩)

வழிவினாதல்.

கலைமான்வினாயகருத்துமுற்றி
மலைமானண்ணல்வழிவினாயது.

சிலம்பணிகொண்டசெஞ்சீறடிபங்கன்றன்சீரடியார் [புங்
குலம்பணிகொள்ளவெனைக்கொடுத்தோன்கொணடு தானணி
கலம்பணிகொண்டிடமம்பலங்கொண்டவன்கார்க்கயிலைச்
சிலம்பணிகொண்டநுஞ்சீறூர்க்குரைமின்கள்சென்னெறியே

பதிவினாதல்.

பதியொடுபிறவினாய்மொழிபலமொழிந்து
மதியுடன்படுக்கமன்னன்வலிந்தது.

ஒருங்கடமூவெயிலொற்றைக்கணைகொள்சிற்றம்பலவன்
கருங்கடமுன்றுகுநால்வாய்க்கரியுரிததோன்கயிலை
யிருங்கடமூடும்பொழிலெழிற்கொம்பரன்னீர்களின்னே
வருங்கடமூர்பகர்ந்தாற்பழியோவிங்குவாழ்பவர்க்கே. (௫௫)

பெயர்வினாதல்.
பேரமைத்தோளியர்
பெயர்வினைய து.

தாமென்னவோங்குசடைமுடிமேற்றனித்திங்கள்வைத்த
காமென்னவாருங்கறைமிடற்றம்பலவன்கயிலை
யூமென்னவென்னவுமலராய்திறவீமொழிவீபழியேற்
பேமென்னவோவுரையீர்விரையீர்ங்குழற்பேதையரே. (௫௬)

மொழிபெறாதுகூறல்.
தேமொழியவர்வாய்மொழிபெறாது
மட்டவிழ்தாரோன்கட்டுரைத்த து.

இரதமுடையநடமாட்டுடையவரொம்முடையா
வரதமுடையவணிதில்லையன்னவரிப்புனத்தார்
விரதமுடையர்விருந்தொடுபேச்சின்மைமீட்டதன்றேற்
சரதமுடையர்மணிவாய்திறக்கிற்சலக்கென்பவே. (௫௭)

கருத்தறிவித்தல்.
உரைத்ததுரையாது
கருத்தறிவித்த து.

மின்னிறமாணுதல்வெணிறக்கண்மெல்லியலைமல்லற்
றன்னிறமொன்றிலிருத்திநின்றோன்றனதம்பலம்போன்
மின்னிறநுண்ணிடைப்பேரொழில் வெண்ணகைப்பைந்தொ
டியீர்
பொன்னிறவல்குலுக்காமோமணிநிறப்பூந்தழையே. [டியீர்

இடைவினாதல்.
வழிபதிபிறவினா ய்
மொழிபலமொழிந்த து.

கலைகீழகலல்குற்பாரமதாரங்கண்ணார்நதிலங்கு
முலைக்கீழ்ச்சிறிதின்றிநிற்றன்முற்றாதன்றிலங்கையர்கோன்
மலைக்கீழ்விழச்செற்றசிற்றம்பலவர்வண்பூங்கயிலைச்
சிலைக்கீழ்க்கணையன்னகண்ணீரொதுநுங்கள்சிற்றிடையே ௫௮

ஐந்தாவது
# இருவருமுளவழியவன்வரவுணர்தல்.

ஐயுறுதல்.
அடற்கதிர்வேலோன்றொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கியையமுற்ற து.

பல்லிலனாகப்பகலைவென்றோன்றில்லைபாடலர்போ
லெல்லிலனாகத்தோடேனம்வினாவிவன்யாவன்கொலாம்
வில்லிலனாகத் தழைகையில் வேட்டைகொண்டாட்ட மெய்
சொல்லிலனாகற்றவாகடவானிச்சுனைப்புனமே. (௫௯)[யோா

அறிவுநாடல்.

வெற்பன்விளையசொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கியறிவுநாடிய து.

ஆழமன்னேவுடைததிவ்வையர்வார்த்தையனைகளைந்து
வீழமுன்னேக்கியவம்பலத்தான்வெற்பினிப்புனத்தே
வேழமுன்னய்க்கலையாய்ப்பிறவாய்ப்பின்னுமென்றமையாய்
மாழைமெனநோக்கியிடையாய்க்கழிந்ததுவநதுவநதே. (௬௧)

ஆறாவது

முன்னுறவுணாதல.

வாட்டம்வினாதல்.

மின்னிடைமடந்தைதன்னியனேக்கி
வீஙகுமென்முலைப்பாஙகிபகர்நத து.

நிருத்தம்பயின்றவன்சிற்றம்பலத்துநெற்றித்தனிகக
ணொருத்தன்பயிலுங்கயிலைமலையினுயாகுமிதந
திருததம்பயிலுஞ்சுனைகுடைந்தாடிச்சிலம்பெதிாகூஉய்
வருத்தம்பயின்றுகொல்லோவல்லிமெல்லியல்வாடியதே. ௬௨

எழாவது

குறையுறவுணர்தல.

குறையுற்றுநிற்றல.

கறையுற்றவேலவ ன்
குறையுற்ற து.

மடுக்கோகடலினவிடுதிமிலன்றிமறிதிரைமீன்
படுகசோபணிலம்பலகுளிக்கோபரன்றில்லைமுன்றிற்
கொடுக்கோவளைமற்றுநும்மையர்க்காயகுற்றேவலசெய்கோ
தொடுக்கோபணியீரணியீர்மலர்துஞ்சுரிகுழற்கே. (௬௩)

அவன்குறிப்பறிதல்.

பொற்றொடித்தோளிதன்சிற்றிடைப்பாங்கி
வெறிப்பூஞ்சிலம்பன்குறிப்பறிந்த து.

அளியமன்னும்மொன்றுடைத் தண்ணலெண்ணரன் றில்லைய
கினியமன்னுநகடியச்செல்லசிற்பிற்கிளாளகத ன்ஞள்
தனியமாநதேறின்வறிதேயிருப்பிற்பளிங்கடுத்த கத்தே. (௬௪)
வொளியமர்ந்தாங்கொன்றுபோன்றொன்றுதோன்றுமொளிமு

அவள்குறிப்பறிதல்.

ஆங்கவள்குறிப்பு ப்
பாங்கிபகர்ந்த து.

பிழைகொண்டொருவிக்கெடாதன்புசெய்யிற்பிறவி யைனு, முழைகொண்டொருவன்செல்லாமைநின்றம்பலத்தாடுமு

ன்றே, ஞுழைகொண்டொருங்கிரு நோக்கம்பயின்ற வெம்
மொண்ணுதனமாந, தழைகொண்டொருவ னென்னுமுன்னே
முன்னந்தழைத்திடுமே. (௫௬)

இருவர்நினைவுமொருவழியுணர்தல்.

அன்புறுநோக்கங்கண்டு
தன்புறுதோழியெண்ணியது.

மெய்யேயிவற்கில்லைவேட்டையின்மேன்மனமீட்டிவளும்
பொய்யேபுனத்தினைக்காப்பதிறைபுலியூரனையாண்
மையேயாகுவளைக்கண்வண்டினமவாழுஞ்செந்தாமரைவா
யையயேயெனிறுங்குடைந்தின்பத்தேனுண்டெழிறருமே. (௫௭)
எட்டாவது

## நாணநாட்டம்.

பிறைதொழுகென்றல்

பிறைதொழுகென்றுபேதைமாதரை
நறுநுதற்பாங்கிநாணநாட்டியது.

மைவாகருங்கண்ணிசெங்கரங்கூப்புமறந்துமறப்
பொய்வானவரிற்புகாதுதனபொற்கழற்கேயடியே
உய்வானபுகவொளிர்தில்லைநின்றோனசடைமேலதொத்துச்
செவ்வானடைந்தபசுங்கதிர்வெள்ளைச்சிறுபிறைக்கே. (௫௮)

வேறுபடுத்துக்கூறல்.

வேயவளைத்தோளியைவேறுபாடுகண்
டாய்வளைத்தோழியணங்கென்றது.

அக்கின்றவாமணிசேர்கண்டனம்பலவன்மலயத்
திக்குன்றவாணாகொழுந்திச்செழுந்தண்புனமுடையா
ளக்குன்றவாறமாந்தாடச்சென்றாளங்கமவ்வவ்வையே
யொக்கின்றவாறணங்கேயிணங்காகுமுனக்கவளே. (௫௯)

சுனையாடல்கூறிநகைத்தல்.

மாணநாட்டியவார்குழற்பேதையை
நாணநாட்டிநகைசெய்தது.

செந்நிறமேனிவெண்ணீறணிவோன்றில்லையம்பலம்போ
லந்நிறமேனிநின்கொங்கையிலங்கழிகுங்குமமு
மைந்நிறவார்குழன்மாலையுந்தாதும்வளாய்மதஞ்சே
ரிந்நிறமுமபெறில்யானுங்குடைவனிருஞ்சுனையே. (௬௰)

புணர்ச்சியுரைத்தல்.

மணக்குறிநோக்கிப்—புணர்ச்சியுரைத்தது.

பருங்கண்கவர்கொலைவேழப்படையோன்படப்படர்தீக்
தருங்கண்ணுதற்றில்லையம்பலத்தோன்றடமால்வரைவாய்க்
கருங்கண்சிவப்பக்கனிவாய்விளர்ப்பக்கண்ணுரளிபின
வருங்கணமலைமலர்சூட்டவற்றோமற்றுவ்வானசுனையே. (௭௰)

மதியுடம்படுத்தல்.

உயிலவேற்கண்ணியோடாடவன்றனக்-குயிரொன்றென
மயிலியற்றோழி மதியுடம்பட்ட து

காகத்திருகண்ணிற்கொன்றேமணிகலந்தாங்கிருவ
ராகத்துளோருயிர்கண்டனம்யாமின்றியாவையுமா
மேகத்தொருவனிரும்பொழிலம்பலவன்மலையிற்
றோகைக்குத்தோன்றற்குமொன்றாய்வருமின்பத்துன்பங்களே.

ஒன்பதாவது

## நடுங்க நாட்டம்.

நடுங்கப்பாங்கி
நடுங்கநாட்டிய து.

ஆவாவிருவரறியாவடிதில்லையம்பலத்து
(மூவாயிரவர்வணங்கநின்றோனையுன்னாரின்முன்னித்
தீவாயுழுவைகிழித்ததந்தோசிறிதேபிழைப்பித் [௭௨
தாவாமணிவேல்பணிகொண்டவாறின்றோராண்டகையே.

பத்தாவது

## மடல்.

ஆற்றாதுரைத்தல்

மல்லற்றிரள்வரைத்தோளவன்
சொல்லாற்றாதுசொல்லியது.

பொருளாவெனைப்புகுந்தாண்டுபுரந்தரன்மாலயன்பா
லிருளாயிருக்குமொளிநின்றசிற்றம்பலமெனலாஞ்
சுருளார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்துடியிடையீ
ரருளாதொழியினொழியாதழியுமென்னாருயிரே. (௭௩)

உலகின்மேல்வைத்துரைத்தல்.

புலவேலண்ணல்புனைமடலேற்
றுலகின்மேல்வைத்துய்த்துரைத்தது.

காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து
வீசினபோதுள்ளமீனிழந்தாவியன்றென்புலியூ
ரீசனசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்
பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே. (௭௪)

தன்றுணிவுரைத்தல்.

மானவேலவன்மடன்மாமிசை
யானுமேறுவனென்னவுரைத்தது.

விண்ணைமடங்கவிரிநீர்பரந்துவெற்புக்கரப்ப
மண்ணைமடங்கவருமொருகாலத்துமன்னிநிற்கு
மண்ணைமடங்கலதளம்பலவனருளிலர்போற் [யே (எ௫
பெண்ணைமடன்மிசையானவரப்பண்ணிற்றோர்பெண்கொடி

மடலேறும்வகையுரைத்தல்.

அடல்வேலவனழிவற்று
மடலேறும்வகையுரைத்தது.

கழிகின்றவென்னையு நின்றநின்கார்மயிறன்னையும்யான் [ன்
கிழியொன்றநாடியெழுதிக்கைக்கொண்டென் பிறவிகெட்டி
றழிகின்றதாக்கியதாளம்பலவன்கயிலையந்தேன்
பொழிகின்றசாரனுஞ்சீறூர்த்தெருவிடைப்போதுவனே.(எ௬

அருளாலரிதெனவிலக்கல்.

அடல்வேலண்ணலருளுடைமையின்
மடலேற்றுனக்கரிதென்றது.

நடனாம்வணங்குந்தொல்லோனெல்லைநான்முகன்மாலறியாக்
கடனாமுருவத்தரன்றில்லைமல்லற்கணனாந்தபெண்ணை [து
யுடனாம்பெடையொடொண்சேவலுமுட்டையுங்கட்டழித்
மடனாம்புனைதரின்யார்கண்ணதோமன்னவின்னருளே.(எஎ)

மொழிநடையெழுதலரிதெனவிலக்கல்.

அவையவமரிதினண்ணறீட்டினு
மிவையிவைதீட்டலியலாதென்றது.

அடிச்சந்தமால்கண்டிலாதனகாட்டிவந்தாண்டுகொண்டென்
முடிச்சந்தமாமலராக்குமுன்னோன்புலியூர்புரையுங்
கடிச்சந்தயாழ்கற்றமென்மொழிக்கன்னியனநடைக்குப்
படிச்சந்தமாக்கும்படமுளவோநும்பரிசகத்தே. (எ௮)

அவயவமெழுதலரிதெனவிலக்கல்.

அவயவமானவை
யிவையிவையென்றது.

யாழுமெழுதியெழின்முத்தெழுதியிருளின்மென்பூச்
சூழுமெழுதியோர்தொண்டையுந்தீட்டியென்றால்பிறவி
யேழுமெழுதாவகைசிதைத்தோன்புலியூரிளமாம
போழுமெழுதிற்றோர்கொம்பருண்டேற்கொண்டுபோதுகவே

உடன்படாதுவிலக்கல்.

அடுபடையண்ணலழிதுயரொழிகென
மடநடைத்தோழிமடல்விலக்கிய து.

ஊராவரியொழிவாயுயர்பெண்ணைத்திண்மடனின்குறிப்புச
சீராவாயசிலம்பதிருத்தவிருநதிலமீசர்தில்லைக்
காராவாய்குழலிக்குன்றதரவோதிக்கற்பிததுககண்டா
லாராவாய்தரினறிவார்பின்னைச்செய்கவறிந்தனவே. (அ௰)

உடன்பட்டுவிலக்கல்.

அரவருநுண்ணிடைக்குரவருகூந்தலென்
னுள்ளககருத்துவிள்ளாளென்ற து

பைந்நாணரவன்படுகடல்வாய்ப்படுநஞ்சமுதா
மைந்நாண்மணிகணடன்மன்னும்புலியூா மணந்தபொன்னிம
மொய்ந்நாண்முதுதிரைவாயானழுநதினுமென்னினமுனனு
மிந்நாளிதுமதுவாாகுழலாட்கெனகணின்னருளே. (அக)

பதினொராவது

குறைநயப்பு.

குறிப்பறிதல்.

நறைவளர்கோதையைக்குறைநயப்பிததற்
குள்ளறிகுற்றவொளளிழையுரைதத து.

தாதேய்மலாக்குஞ்சியஞ்சிறைவண்டுதண்டேன்பருகித்
தேதேயெனுந்தில்லையோன்சேயெனச்சினவேலொருவா
மாதேபுனததிடைவாளாவருவர்வந்தியாதுஞ்சொல்லா
ரோதேசெயதத ஈகதுமறுவாாகுழலேநிழையே. (அஉ)

மென்மொழியாற்கூறல்.

ஒளிருறுவேலவன்றளாவுறுகினற மை
யின்மொழியவட்குமென்மொழிமொழிநதது

வரிசேர்தடங்கண்ணிமம்மர்கைம்மிக்கெனனமாயங்கொலோ
வெரிசேர்தளிரன்னமேனியனீர்நதழையன்புலியூர்ப [னனைத
புரிசேர்சடையோன்புதல்வன்கொல்பூங்கணை வேள்கொலெ
தெரியேமுனையான்பிரியாதொருவனிததிம்புனமே. (அந)

விரவிக்கூறல்

வன்மொழியின்மனமெலிவதஞ் சி
மென்மொழிவிரவிமிகுத்துரைததது.

நீகண்டனையெனின்வாழலைநேரிழையம்பலததான் [ன
சேய்கண்டனையன்சென்றாங்கோரலவன்றன் சீர்ப்பெடையி
வாய்வண்டனையதொர்நாவற்கனிநனிநல்கக்கண்டு
பேய்கண்டனையதொன்றாகிநின்றானப்பெருந்தகையே (அச)

